REGD. No. TN MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 42021 4 பக்கம் விலை 40 காசு










மலர்: 6 சென்னை 21—12—1981 திங்கள் வெளியூர் 22—12—1981 செவ்வாய் இதழ்: 65

# ஜனவரி 24, 29 தேதிகளில் பஞ்சாயத்து தேர்தல்

# திட்டமிட்டபடி நடக்கும்

**ஆலோசனைக் குழுவில் முடிவு:**

## முக்கிய தன்னிறைவு திட்டங்களுக்கு பாரதியார் பெயர்

**சென்னை, டிச, 21— தன்னிறைவுத் திட்டத்தின் சார்பில் துவங்க இருக்கும் முக்கியத் திட்டங்களுக்கு பாரதியாரின் பெயரைச் சூட்டுவது என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது.**

மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழாவையொட்டி ஊராட்சி ஒன்றியங்கள், நகராட்சிகள் ஆகியவற்றில் நடத்துவது குறித்து உள்ளாட்சித் துறை அமைச்சர்குழந்தைவேலு தலைமையில் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் எடுக்கப்பட்ட முடிவுகள்வருமாறு:

1982-ம்ஆண்டு ஜனவரி 1ந்தேதியிலிருந்து டிசம்பர் 11 வரை எல்லா ஊராட்சி ஒன்றியங்களிலும் பாரதியார் நூற்றாண்டுவிழாவை தொடர்ந்து நடத்துவது.

வெறும் விழாவாக மட்டும் அல்லாமல் பாரதியின் உயரியகருத்துக்களான பெண்ணுரிமை சாதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு ஆதிதிராவிடர்கள் முன்னேற்றம் ஆகியவைகள் தொடர்பான புதியத் திட்டங்கள் தொடங்கப்படும்,

### பாரதி பெயர்

இந்த ஆண்டில்தொடங்கப்படும் பள்ளிக் கட்டிடங்கள், குழந்தைகள் காப்பகங்கள். ஒன்றிய மருந்தக கட்டிடங்கள் மகப்பேறு நிலையங்கள் தொழில் பயிற்சி கட்டிடங்கள் ஆகியவற்றுக்கு 'மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழா கட்டிடம் என்று பெயரிடப்படும்.

தன்னிறைவுத் திட்டத்தின் சார்பாகஇந்தஆண்டு ஆண்டு துவங்க இருக்கும் முக்கிய திட்டங்களுக்கு மகாகவி பாரதியார் பெயரிடப்படும்.

இத்திட்டங்கள் செயல்படுத்தப்படாத ஊராட்சி ஒன்றியங்களில் வளர்ச்சிப் பணித் திட்டங்கள் பாரதியார் நினைவாகத் தொடங்கப்படும்.

### கவிதைப் போட்டி

விழா நிகழ்ச்சிகள் ஊராட்சி ஒன்றியங்களில் நாள் முழுவதும் நடைபெறவேண்டும். பாரதியாரின் முற்போக்கு கொள்கைகள் பற்றி பள்ளி மாணவ - மாணவியர் ஊனமுற்றோர் ஆகியோரிடையே நடத்தப்படும் பேச்சுப் போட்டி, கவிதைப் போட்டி ஆகியவற்றில் வெற்றிபெற்றோருக்கு பரிசளிக்கப்படும். இப்போட்டிகளில் வெற்றி பெற்றவர்களைக் கொண்டு



மாவட்ட, மாநில அளவில் போட்டி நடத்தப்படும்.

மாநிலத்தில் உள்ள எல்லா நகராட்சிகள் மாநகராட்சிகள் இவ்விழாவை நடத்துவதற்கான திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

### அமைச்சர்கள் தலைமையில்குழு

ஒவ்வொரு மாவட்டத்திலும் விழாவை சிறந்த முறையில் கொண்டாட ஒவ்வொரு அமைச்சர் தலைமையிலும் மாவட்டகுழுக்கள் அமைக்கப்படும்.

இவ்வாண்டு தேசிய ஒருமைப்பாடு ஆண்டாக அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஆண்டு முழுவதும் பாரதியார் போற்றி வந்த சாதி சமய இன ஒருமைப்பாட்டு உணர்வுகளை மக்களிடையே பரப்புவதற்கு எல்லா பொது நிறுவனங்களும், அரசு அலுவலகங்களும், கல்வி நிறுவனங்களும் ஒருமைப்பாட்டு உணர்வினை வளர்க்கும் ஆர்வம் கொண்டவர்களும் ஆவன செய்ய வேண்டுமென அரசு கருதுகிறது.

பாரதியார் நூற்றாண்டு விழாவினையொட்டி நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளிலும் இக்கருத்து வலியுறுத்தப்படும்.

### அரசியல் புகக்கூடாது

ஊராட்சி ஒன்றியங்களிலும் நகராட்சிகளிலும், நடைபெறும் பாரதி நூற்றாண்டு விழாவில் பாரதியின் கருத்துக்களை வலியுறுத்த வேண்டுமேயன்றி அரசியல் புகா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஊராட்சி ஒன்றியங்களில் உள்ள பள்ளி கல்வி நிறுவனங்களின் மாணவ மாணவிகளின் கலைநிகழ்ச்சிகள் இவ்விழாக்களில் நடைபெறும்.

இவ்வாறு அந்த உட்குழுவில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

---

**பொங்கல் பரிசு ரூ. 260:**

## கழக அரசுக்கு பி. ஆர். சி. தொழிலாளர் நன்றி

சென்னை, டிச. 21— தமிழகத்தில் அனைத்து பஸ் போக்குவரத்துக் கழக தொழிலாளர்களுக்கும் பொங்கல் பரிசாக ரூபாய் 260 ஊக்க போனஸ் அளித்தமைக்கு முதல்வர் புரட்சித்தலைவருக்கும் போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமிக்கும் பாண்டியன் போக்குவரத்துக் கழக அண்ணா நிர்வாகப் பணியாளர் சங்கம் சவிபில் விசாகநாதன், க்ர்டர் மோகன், வெள்ளையத்தா, ராமுலு, பாண்டி ஆகியோர் நன்றிதெரிவித்துள்ளனர்.

---

## அமைச்சர் குழந்தைவேலு பேட்டி

**சென்னை, டிச. 21- ஏற்கனவே அறிவித்தபடி ஜனவரி 24, 29 ஆகிய தேதிகளில் பஞ்சாயத்துத் தேர்தல் திட்டமிட்டபடி நடக்கும் என்று அமைச்சர் குழந்தைவேலு கூறினர்,**

தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சர்குழந்தை வேலு இன்றுநிருபர்களுக்கு பேட்டியளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

தமிழ் நாட்டில் பஞ்சாயத்து தேர்தலுக்காக அறிவிக்கப்பட்டுள்ள தேதியில் எந்தவித மாற்றமும் இல்லை.

ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள இட ஒதுக்கீடு பற்றிய புகார் கோரிக்கை அரசுக்கு அனுப்புமாறு கேட்டிருந்தோம்.

### இறுதிப் பட்டியல்

அதை ஒட்டி 4 ஆயிரம் ஆட்சேபமனுக்கள் அரசுக்கு வந்துள்ளது. இது பரிசீலிக்கப்பட்டு இறுதி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு 24 ந்தேதியன்று இறுதிப் பட்டியல் வெளியிடப்படும்.

அன்றைய தினமே தேர்தல் பற்றி அதிகார பூர்வமான அறிக்கை வெளியிடப்படும்.

### தவறான குற்றசாட்டு

மக்கள் தொகை கணக்கெடுப்பின் பட்டியல் பல இடங்களில் கிடைக்கவில்லைஎன சொல்லிப்புகார் தவறானது ஆகும். எல்லா இடங்களிலும் அப்பட்டியல் கிடைக்கிறது.

ஜனவரி மாதம் 24, 29ந் தேதிகளில் திட்டப்படி பஞ்சாயத்து தேர்தல்கள் நடைபெறும்.

ஊராட்சி ஒன்றியங்களில் நடைபெறும் பாரதி விழாவிற்கு ஆயிரம் ரூபாய் வீதம் வழங்க உத்தரவிடப்பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினர்.



---

## சென்னையில் தடையை மீறியதாக 130 பேர் கைது

சென்னை, டிச. 21— சென்னை நகரில் தடை உத்தரவை மீறி ஊர்வலம் நடத்தியதாக கட்டிடத் தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் பொன் குமார் உட்பட 130 பேர் கைது செய்யப்பட்டனர். இவர்களில் 4 பேர் பெண்கள் ஆவார்கள்.

சென்னை பனகல் பார்க் அருகே இவர்கள் கைது செய்யப்பட்டனர்.

---

## கனவு கண்டது யார்; சொல்!

**கஷ்டகாலம் என்பார்களே, அப்படிப்பட்ட கஷ்டகாலம் திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு, ஆட்சி கவிழ்க்கப்பட்டு ஆட்சியிலே இருந்தவர்கள் எவ்வளவோ வேதனைகளுக்கும் ஆளாக்கப்பட்டு...... தி. மு.க. கலகலத்து விடும் என்றெல்லாம் எங்கிருந்தோ சில பேர் கனவு கண்டு கொண்டிருந்த காலத்தில்........**

**— கருணாநிதி**

அது என்ன; 'எங்கிருந்தோ சிலர்?' எங்கிருந்து? எந்தச் சிலர்? தைரியமிருந்தால் பட்டென்று பட்டவர்த்தனமாகச் சொல்லவேண்டியது தானே? அதுதான் அரசியல்வாதிகளுக்கு அழகு.

---

(8,ம் பத்தி தொடர்ச்சி)

கருவூலத்துறை ஊழியர்களுக்கு 16 நாட்கள் சம்பளம் இன்னும் வரவில்லை. விவசாயத்துறை அலுவலர்களுக்கு ஒரு நாள் சம்பளம் வரவில்லை. இந்த நிலைமையில் மேலும் வேலை நிறுத்தப் போராட்டத்தை அறிவித்திருப்பது தேவையற்றது.

### சுமுக உறவு

எந்த ஒரு பிரச்சினையையும் அரசுடன் நல்ல முறையில் பேச்சு வார்த்தை நடத்துவதன்மூலம்தீர்த்து வைத்து அரசுக்கும் அரசு அலுவலகட்கும் இடையே சுமுகமான உறவை வளர்க்க வேண்டு என்ற கொள்கையைக் கொண்ட தமிழ்நாடு அரசு அனைத்துத் துறை அலுவலர் தேசிய சங்கம் இந்த வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபடாது என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

அரசு அலுவலர்களின் தீர்க்கப்படாமல் உள்ள பிரச்சினைகளை அனைத்துச் சங்கங்களுடன் விவாதித்து ஆவன செய்ய வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுதத்துள்ளோம்.

இவ்வாறு அந்த அறிக்கையில் நரசிம்மன் ரங்கராஜன் ஆகியோர் அறிவித்துள்ளனர்.

---

**சிவ இளங்கோ போராட்டம்:**

## தமிழ்நாடு அரசு அலுவலர் தேசிய சங்கம் கண்டனம்

**சென்னை, டிச. 21—தேசிய விரோத சக்திகளைத் தூண்டிவிடும் வகையில் வரும் ஜனவரி 19-ம் தேதி போராட்டம் நடத்தப் போவதாக சிவஇளங்கோ அறிவித்திருப்பதற்குத் தமிழ்நாடு அரசு அனைத்துத்துறை அலுவலர் தேசிய சங்கம் கடும் கண்டனம் தெரிவித்திருக்கிறது.**

தமிழ்நாடு அரசு அனைத்துத்துறை அலுவலர் சங்கம் சார்பில் அதன் மாநிலத் தலைவர் ஏ. ஜி. நரசிம்மன் பொதுச் செயலாளர் க.ரங்கராஜன் ஆகியோர் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் குறிப்பிட்டுள்ளதாவது:

1982ம் ஆண்டு ஜனவரி மாதம் 19ம் தேதி தேசிய அளவில் வேலை நிறுத்தப் போராட்டம் நடைபெறும் என்றும் அதில் தமிழக ஊழியர்களும் ஈடுபடுவார்கள் என்றும்சிவ. இளங்கோ திருச்சியில் நடைபெற்ற மாநாட்டில் அறிவித்திருப்பது ஒரு தலைபட்சமான முடிவு. மத்திய மாநில அரசுகளை ஸ்தம்பிக்க செய்ய தேசவிரோத சக்திகளால் தூண்டிவிடப்பட்டுள்ள போராட்டத்திற்கு என். ஜி. ஓ. தலைமை எடுத்துள்ள முடிவு ஜனநாயகத்திற்கு விடப்பட்டுள்ள சவாலாகும்,

### அரசு விரோதப் போக்கு

ஏற்கனவே சிவ. இளங்கோவின் அரசு விரோதப் போக்கினால்

(6 ம் பத்தி பார்க்க)

---

## இல்லை, இல்லை இல்லவே இல்லை!

**அன்பழகனைவிட ஆற்றல்படைத்தவர்களா எம். ஜி. ஆருக்குப் பக்கத்தில் இருக்கிறர்கள்?**

**—கருணாநிதி**

அடடா... அன்பழகனின் ஆற்றலும் வீரமும் அவனிக்கே தெரியுமே!

'கருணாநிதியைத் தலைவனாக ஏற்றுக் கொண்டால் என் மனைவி கூட என்னை மதிக்க மாட்டாள்' என்று— வீராவேசமாக மேடைகளில் பேசித்திரிந்த அன்பழகன்;

'மந்திரி பதவி' என்ற ஒன்றே ஒன்றுக்காக —

தனது தலைவராக கருணாநிதியை ஏற்றுக் கொண்டது மட்டுமல்ல — தமிழ் இனத்துக்கே கருணாநிதி தான் தலைவர் என்று கண்டுபிடித்திருக்கிறரே .........

நிஜமாக — இந்த அளவுக்கு 'ஆற்றல்' உள்ளவர்கள் யாரும் புரட்சித்தலைவருக்குப் பக்கத்திலே இல்லை. இல்லவே இல்லை.

---

## இரண்டுக்கு மேல் பெற்றால் வரி

சியோல், டிச. 21— மக்கள் தொகை பெருக்கம் ஒரு நாட்டின் வளர்ச்சித் திட்டங்களையே பாழடித்து விடுவது கண் கூடு, மக்கள் பெருக்கத்தை தடுத்து நிறுத்த 2 குழந்தைகளுக்கு மேல் பெற்றுக் கொள்ளும் பெற்றோர்களுக்கு, கல்வி வரி, பள்ளிக்கூடவரி, வருமானவரி என்று வரிமேல் வரிவிதிக்க தென்கொரியா அரசு முடிவு செய்துள்ளது.

இப்படி வரிவிதிப்பதன் மூலம் ஒரு அளவுக்கு மக்கள் பெருக்கத்தை குறைத்தும் அதே நேரத்தில் குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தை நல்ல முறையில் செயல்படுத்தலாம் என்றும் தென்கொரியா அரசு இந்த முடிவை மேற் கொண்டுள்ளது.

தென் கொரியாவில் 2 குழந்தைகளுக்கு மேல் ஒரு குடும்பத்தில் பிறக்குமானால் அந்த பெற்றோர்களுக்கு வரிவிதிக்கப்படும். 3 குழந்தைகளோ அதற்கு மேலோ பிறக்குமானால அந்தக் குழந்தைகளின் பெற்றோர்கள் மேலும கூடுதல் வரி செலுத்த வேண்டும்.

அதுமட்டுமா அதிக குழந்தைகள் பெற்றுக் கொண்டவர்கள் அந்தக் குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூடத்துக்கும் வரி செலுத்த வேண்டும், டும். தவிர கல்விவரி வேறு தொழிலாளர்கள் வருமான வரியும் செலுத்த வேண்டும்,

இப்படி வரி மேல்வரி போட்டாலாவது மக்கள் தொகை பெருகாமல் பொதுமக்கள் பார்த்துக்கொள்வார்கள் என்பதையும் தென்கொரியா உன்னிப்பாக கவனித்து வருகிறது.

வரி எவ்வளவு போட்டாலும் நாங்கள் மேன் மேலும் குழந்தைகளை பெற்றுக் கொள்வோம் என்றும்மக்கள்பெருக்கத்தில் ஈடுபடுவார்களேயானல் அதற்கும் தகுந்தவாறு வேறு பல நடவடிக்கைகளை எடுக்கலாம் என்றும் தென் கொரியா அரசு தீர்மானித்திருக்கிறது.

---

ஒருங்கிணைக்கப்படாத தொழிலாளர்கட்கு

# விரைவில் பாதுகாப்பு சட்டம்

## பேரவை செயற்குழு வற்புறுத்தல்

சேலம், டிச. 21-அமைப்பு ரீதியாக ஒருங்கிணைக்கப்படாதத் தொழிலாளர்களுக்கான பாதுகாப்புச் சட்டம் விரைவில் இயற்றப்பட வேண்டும் என்று அண்ணா தொழிற்சங்கப் பேரவை வற்புறுத்தியுள்ளது.

அண்ணா தொழிற்சங்கப் பேரவைக் கூட்டம் 20 ந் தேதி சேலத்தில் பேரவைத் தலைவர் யு. ஆர். கிருஷ்ணன் தலைமையில் கூடியது. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக தொழிற்சங்கப் பிரிவுச் செயலாளரும், அண்ணா தொழிற்சங்கப் பேரவைப் பொதுச்செயலாளருமான வை. பெருமாள், புரட்சித்தலைவர் அரசு தொழிலாளர்களுக்கு ஆற்றிவருகிற சிறப்புமிகு பணிகள் குறித்தும், இதுவரை பேரவை ஆற்றியுள்ள பணிகள் குறித்தும், தொடர்ந்து மேலும் ஆற்ற வேண்டிய பணிகள் குறித்தும் விளக்கஉரை ஆற்றி செயற்குழு விவாதத்தை துவக்கி வைத்தார்.

பேரவைத் துணைத்தலைவர்கள் எஸ். நம்பிராஜன், ஆர். சண்முகம், சர்க்கரைப் பிரிவுச் செயலாளர் டி. பொன்னுசாமி, விவசாயப் பிரிவுச் செயலாளர் இலட்சுமிநாராயணன், சட்டமன்ற உறுப்பினர் இரா. சக்கரபாணி, சேலம் நகரக் கழகச்செயலாளர் எஸ். பி. அங்கமுத்து ஆகியோரும் மற்றும் செயற்குழு உறுப்பினர்களும், சிறப்பு அழைப்பாளர்களும் செயற்குழு விவாதத்தில் பங்கேற்று கருத்துரை ஆற்றினார்கள்.

பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன, பேரவைப் பொதுச்செயலாளரின் செயற்குழு நிறைவு உரைக்கு பின்னர் பேரவைப் பொருளாளர் கே. இராஜேந்திரன் நன்றி கூறினார். இரவு 7 மணியளவில் செயற்குழு நடவடிக்கைகள் நிறைவு பெற்றது. நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் விவரம் வருமாறு:—

## தீர்மான விவரம் :

தேசிய மகாகவி பாரதியாரின் நூறுவது பிறந்த தின விழாவினை ஓராண்டு முழுவதும் கொண்டாடுவது என்று புரட்சித்தலைவர் அரசு முடிவெடுத்து செயல்படுத்தி வருவதை இச்செயற்குழு பாராட்டி வரவேற்கிறது.

முன்மொழிபவர்: டி.பி நடேசன், சேலம்

வழிமொழிபவர்கள்: மா.முனியன் தென்னாற்காடு
மாறன் —பரமக்குடி

ஊராட்சி, பேரூராட்சி, ஊராட்சி ஒன்றிய தேர்தல்களில் பதினெட்டு வயது நிரம்பியவர்களுக்கு வாக்குரிமை அளித்திருப்பதையும், தாழ்த்தப்பட்டவர்களுக்கு 18 சதவீதமும், பெண்களுக்கு 15 சதவீதமும், இட ஒதுக்கீடு செய்திருப்பதையும், விரைவாக தேர்தல் நடத்த புரட்சித்தலைவர் அரசு எடுத்து வருகிற நடவடிக்கைகளையும் இச்செயற்குழு பாராட்டி வரவேற்று நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

முன்மொழிபவர்: இரா. முத்துச்சாமி —வால்பாறை

வழிமொழிபவர்கள்: தனுஷ்கோடி —இராசபாளையம்
சந்திரன் — ஓமலூர்

தொழிற்சங்கத் தலைவர்கள் சமரசப் பேச்சு வார்த்தையின் காரணமாகவோ தொழிலாளர் நீதிமன்றப் பணிகளின் காரணமாகவோ சென்னைக்கு வந்தால் மிகக்குறைந்த வாடகையில் (ரூ. 5.) சென்னையில் தங்குவதற்கு தொழிலாளர் நல வாரியத்தின் மூலமாக கட்டிடம் கட்டிக் கொடுத்து, அதற்கு "ஜீவா" இல்லம் என்று பெயர் சூட்டி திறப்பு விழா நடத்திக் கொடுத்த மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு இச்செயற்குழு தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

## தாயுள்ளம் கொண்ட புரட்சித்தலைவர் அரசு

மேலும் தொழிலாளர் நல வாரியம் துவக்கப்பட்ட காலத்திலிருந்து ஒவ்வொரு தொழிலாளரும் ஆண்டுக்கு ஒரு ரூபாயும், அந்தத் தொழிலாளருக்கு வேலைவாய்ப்பு அளிக்கிற நிர்வாகம் ஆண்டுக்கு இரண்டு ரூபாயும் அளித்து வந்தார்கள். இதுவரை இந்த வாரியத்திற்கு எந்த அரசாங்கமும் நிதியுதவி அளிக்கவில்லை. ஆனால் தாயுள்ளம் கொண்ட புரட்சித்தலைவர் அரசு தொழிற்சங்கத் தலைவர்கள் தங்கும் இல்லம் கட்ட 5 கிரவுண்டு நிலம் அளித்ததோடு, ரூபாய் இரண்டு இலட்சம் நிதியும் உதவியது பாராட்டுக்குரியது. மேலும் தொடர்ந்து ஒவ்வொரு தொழிலாளருக்கும் ரூபாய் இரண்டு வீதம் ஆண்டுக்கு சுமார் ரூ. 15 இலட்சம் அரசு வழங்க ஆணையிட்டதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு இச்செயற்குழு தனது நன்றியையும், பாராட்டுதல்களையும் தெரிவித்துக் கொள்கிறது.

முன்மொழிபவர்: இராமலிங்கம் — மதுரை

வழிமொழிபவர்: ஜார்ஜ்பெளன்டர் பள்ளிப்பாளையம்
கோ. முருகன் — நாகர்கோவில்

## தொழிலாளர் நல சட்டம்

தொழிலாளர் நல வாரியத்திற்கு ஒவ்வொரு தொழிலாளரும் ரூபாய் ஒன்று வீதமும், நிர்வாகம் ஒவ்வொரு தொழிலாளருக்கும் ஆண்டுக்கு ரூ. 2 வீதமும் நிதி செலுத்தி வந்ததை மாற்றி முறையே தொழிலாளர் ஆண்டுக்கு ரூ. 2 வீதமும், நிர்வாகம் ஒவ்வொரு தொழிலாளருக்கு ஆண்டுக்கு ரூ. 4 வீதமும், தமிழக அரசு ஒவ்வொரு தொழிலாளருக்கும் ஆண்டுக்கு ரூ. 2 வீதமும் நிதி செலுத்துவதற்கு ஏற்ப தொழிலாளர் நல வாரிய சட்டத்திருத்தம் செய்து நடப்பு சட்டமன்றக் கூட்டத் தொடரிலேயே நிறைவேற்றித் தரும்படி தமிழக அரசை இச்செயற்குழு கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர்: பி. பழனியப்பன் —புதுக்கோட்டை

வழிமொழிபவர்கள்: எம். பி. ஆறுமுகம்-கோவை
மாதப்பன்-பாலக்கோடு

பணிக்கொடை வழங்கும் சட்டத்தின் கீழ் தொழிலாளர்களுக்கு பணிக்கொடை வழங்கும்போது ஆண்டுக்கு 240 நாட்கள் குறையாமல் வேலை செய்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லாமல், ஒவ்வொரு தொழிலாளியும் பணிபுரிந்துள்ள ஆண்டுகளுக்கு பணிக்கொடையாக ஆண்டிற்கு 15 நாட்கள் என்ற விகிதத்தில் பணிக்கொடை கிடைப்பதற்கு ஏற்ற வகையிலும், மாத ஊதியம் ரூ. 1600/-வரை பெறுகிறவர்களுக்கு இச்சட்டம் பொருந்துகிற வகையில் ஊதிய வரம்பை உயர்த்தியும், ஏற்ற சட்டத்திருத்தம் செய்து மத்திய அரசு விரைவாக அமுலுக்கு கொண்டுவர வேண்டுமென்று இச்செயற்குழு மத்திய அரசைக் கேட்டுக்கொள்கிறது.

மேற்படி சட்டத்திருத்தம் கொண்டு வருவதற்கு தமிழக அரசு, மத்திய அரசை வலியுறுத்தி தீவிர நடவடிக்கை எடுத்து வருவதைப் பாராட்டுவதோடு, தொடர்ந்து முயற்சியெடுத்து விரைவில் சட்டத்திருத்தம் கொண்டுவர ஆவன செய்யும்படி தமிழக அரசை இச்செயற்குழுக் கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்கள்: க.மோசஸ் — வடஆற்காடு

வழிமொழிபவர்கள்: நா.கருப்புசாமி — கோவை
எ.இராதாகிருஷ்ணன் — புதுவை
மாணிக்கம் — குன்னூர்

## அசல்பட்டு துணியை கைத்தறிக்கே ஒதுக்குக

கச்சாப்பட்டு விலை உயர்வின் காரணமாகவும், பற்றுக்குறையின் காரணமாகவும் ஏறத்தாழ ஒரு இலட்சம் கைத்தறி நெசவாளர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்த நிலைமையினை அறிந்து புரட்சித்தலைவர் அரசு உடனடியாக நடவடிக்கை எடுத்து கோ-ஆப்டெக்ஸ் தலைவர் அனகாபுத்தூர் இராமலிங்கம் எம். எல். சி. தலைமையில் டெல்லிக்கு தூதுக்குழுவினையும் அனுப்பி மத்திய அரசு வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்கிற 250 டன் கச்சாப்பட்டு தமிழகத்திற்கு கிடைப்பதற்கு நடவடிக்கை எடுத்திருப்பதற்கு இச்செயற்குழு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறது.

கச்சாப்பட்டினை தேவையான அளவிற்கு இறக்குமதி செய்வதோடு விசைத்தறிகளில் பயன்படுத்தாமல் கைத்தறிகளுக்கே ஒதுக்கவேண்டும் என்று இச்செயற்குழு மத்திய அரசை கேட்டுக்கொள்கிறது.

முன்மொழிபவர்: கோ. வெங்கடாசலம் கும்பகோணம்

வழிமொழிபவர்கள்: எஸ். பி. அங்கமுத்து நகர செயலாளர் — சேலம்.
என். சுப்பிரமணியன் — கோவை.

## வீட்டுவசதித் திட்ட ஊதிய உச்சவரம்பு

தொழிலாளர்கள் வீட்டுவசதி திட்டத்தின் கீழ் பயன்பெறுவதற்கு ரூ. 500-க்கு கீழ் மாத ஊதியம் பெறுகிறவர்களே தகுதி பெற்றவர்கள் என்றிருப்பதை ரூ. 1,000. வரை மாத ஊதியம் பெறுகிற தொழிலாளர்களும் பயன் பெறுவதற்கு தேவையான நடவடிக்கைகளை எடுத்து திருத்தம் செய்யவேண்டும் என்று புரட்சித்தலைவர் அரசை இச்செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: கே. பெருமாள், பி.ஏ.பி.எல்.- திருச்சி

வழிமொழிபவர்கள்: கருப்பண்ணன், — சேலம்
சம்பந்தம் — நெய்வேலி

## தொழிலாளர் துறை அதிகாரிக்கு அதிகாரம்

தொழிற் தகராறு காரணமாக சமரசப் பேச்சு வார்த்தைக்கு அழைக்கும்போது பேச்சுவார்த்தைக்கு வராதவர்களுக்கு சம்மன் அனுப்பி வரவழைக்கும் அதிகாரத்தை தொழிலாளர் துறை அதிகாரிகளுக்கு வழங்கும் வகையில் சட்டம் கொண்டுவந்து தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றி மத்திய அரசிற்கு, குடியரசுத்தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பப்பட்டது. அதே போல வேலைநீக்கம் செய்யப்படுகிற தொழிலாளர்கள் நேரடியாக தொழிலாளர் நீதிமன்றம் சென்று தீர்ப்பு பெறுவதற்கு ஏற்றவகையில் சட்டம் கொண்டுவந்து நிறைவேற்றி மத்திய அரசிற்கு குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட இரண்டு சட்டத் திருத்தங்களுக்கும் குடியரசுத் தலைவரின் ஒப்புதல் கிடைக்காமல் காலதாமதம் ஏற்பட்டு வருகிறது. ஆகவே மத்திய அரசு காலதாமதம் செய்யாமல் மேற்கண்ட இரண்டு சட்டங்களுக்கும், குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெற்றுத்தர வேண்டுமென்று இச்செயற்குழு வலியுறுத்திக்கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: ஜி. பாலச்சந்திரன்-திருச்சி

வழிமொழிபவர்கள்: ஆர்.எம். பழனியப்பன்-ஓசூர்
ஏ. ஆர். பெருமாள்-சேலம்

## தொழிலாளர் பாதுகாப்பு சட்டம்

அமைப்பு ரீதியாக ஒருங்கிணைக்கப்படாதிருக்கிற தொழிலாளர்களுக்கு பாதுகாப்புச் சட்டம் கொண்டு வருவது சம்பந்தமாக தமிழக அரசு எடுத்து வருகிற நடவடிக்கைகளை விரைவுபடுத்தி மத்திய அரசின் ஒப்புதலைப் பெற்று விரைவாக அமுல்படுத்த வேண்டும் என்று தமிழக அரசை இச்செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: வெங்கிடசாமி-திருச்சி

வழிமொழிபவர்: எம். கண்ணன்-சேலம்
சேதுமாதவன்-கோவை

எம்பிளாய்ஸ் ஸ்டேட் இன்சுரன்ஸ் சட்டத்தின் கீழ் ரூ. 1000 வரை மாத ஊதியம் பெறுகிறவர்கள் தான் பயன்பெற தகுதி உடையவர் என்றிருக்கிறது. ஊக்கதொகையாக வழங்கக் கூடிய தொகையையும் ஊதியத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்திருப்பதால் பல நிறுவனங்களில் தொழிலாளர்களுக்கு இத்திட்டம் முழுமையாக பயன்படமுடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே ஊக்க ஊதியத்தை மாதாந்திர ஊதியத்துடன் இணைக்காமலும், இத்திட்டத்தின் கீழ் பயன் பெறுவதற்கு மாத ஊதியம் ரூ. 1600. வரை பெறுகிறவர்களும் தகுதி உடையவர்கள் என்கிற வகையில் தேவையான சட்டத் திருத்தம் செய்ய வேண்டும் என்று மத்திய அரசையும், தமிழக அரசையும் இச்செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: ஆர். பழனிச்சாமி — கோவை

வழிமொழிபவர்கள்: அ. கு. ஏழுமலை — சென்னை
மாணிக்கம்-சேலம்.

## இடைத்தரகர்களை நீக்க வேண்டும்

பல்வேறு தொழில் நிறுவனங்களில் பணிபுரிகிற காவலர்கள் (வாட்சுமேன்) இடைத்தரகர்கள் மூலமாக ஒப்பந்த அடிப்படையில் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். அவ்வாறு அமர்த்தப்படுகிற காவலர்களுக்கு அந்த நிறுவன தொழிலாளர்களுக்கு வழங்குவதை விட மிக மிகக்குறைந்த ஊதியம் வழங்கப்படுகிறது. மற்ற தொழிலாளர்களுக்கு வழங்கப்படுகிற சலுகைகள் மறுக்கப்படுகிறது. ஆகவே இடைத்தரகர்கள் மூலமாக காவலர்கள் வேலைக்கு அமர்த்துவதை தடை செய்து அவர்களை அந்தந்த நிறுவனத்தில் நேரடி தொழிலாளர்களாக மாற்ற வேண்டும். அல்லது அந்தந்த நிறுவனத்தில் மற்ற தொழிலாளர்களுக்கு கிடைக்கிற மருத்துவ வசதி, ஊதியத்துடன் கூடிய விடுமுறை பணிக்கொடை போன்ற இதர சலுகைகளையும் பெறுவதற்கு ஏற்ற வகையில் சட்ட ரீதியான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தமிழக அரசை இச்செயற்குழு கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: மு. முகமது அனீபா — நெய்வேலி

வழிமொழிபவர்கள்: இரா. சக்கரபாணி எம்.எல்.ஏ
கே.எம். ஆறுமுகம் — சங்ககிரி-சேலம்

## தொழில் அமைதியை குலைக்க முயலாதீர்

தமிழகத்தில் தற்போது நிலவிவருகிற தொழில் அமைதியைக் கண்டு பொறுக்காத ஒரு சில எதிர்கட்சிகளைச் சார்ந்த தொழிற்சங்க அமைப்புகள் அரசியல் காழ்ப்புணர்வுகளோடு ஆங்காங்கே போராட்டங்களைத் தூண்டிவிடுகிற முயற்சிகளில் ஈடுபட்டு வருகிறார்கள். மேலும் அனைத்துச்சங்ககூட்டு நடவடிக்கைக்குழு என்ற பெயரில் ஆளும் கட்சியின் தொழிற்சங்கஅமைப்பும் சேர்ந்து போராடுகிறது என்ற நிலையை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறார்கள்.

எனவே அண்ணா தொழிற்சங்கப் பேரவையின் இணைப்புச் சங்கங்கள் பேரவையின் முன் அனுமதி பெறாமல் எந்தவிதமான கூட்டு நடவடிக்கைக்குக் குழுக்களிலும் கலந்துக் கொள்ளக்கூடாது என்றும், தொடர்ந்து தொழில் அமைதியைக் காக்க நடவடிக்கைகள் எடுப்பதோடு, தொழிலாளர் நலன் காக்கத் தேவையான முயற்சிகளை தொடர்ந்து மேற்கொள்ள வேண்டும் என்றும் இச்செயற்குழு இணைப்புச் சங்கங்களைக் கேட்டுக் கொள்கிறது.

முன்மொழிபவர்: ஜி. ராமசாமி-கோவை

வழிமொழிபவர்கள்: ஜி. குருசாமி-முகவை
ஜமாலுதீன்-நாகர்கோவில்

மேற்கண்டவாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

சென்னை — பினங்கு

## தந்தி தொடர்பு: சென்னையில் தபால்தலை வெளியீடு

புதுடெல்லி, டிச. 21 — வங்கக் கடல் அழத்தில் மலேசியாவுக்கும், இந்தியாவுக்கும் தந்தி தொடர்பு ஏற்படவிருக்கிறது.

சென்னையிலிருந்து மலேசியாவிலுள்ள பினாங்குநகரத்துக்குமுதன்முதலாக சப்மரீன் தந்தித் தொடர்பு இம்மாதம்24 ந் தேதியிலிருந்து தொடங்கும்.

இந்தத்தகவல்தொடர்பு துவக்க விழா சென்னையில் வரும் 24-ந் தேதி நடைபெறவிருக்கிறது.

மத்தியதபால்தந்திதுறை அமைச்சர் சி எம். ஸ்டீபன் இந்த விழாவில் கலந்து கொண்டு சப்மரின்கள் மூலம் ஏற்படும் தந்தி தொடர்பு பற்றி சித்தரிக்கும் சிறப்பு தபால்தலைகளை வெளியிடுவார்.

இந்தத் தபால்தலைகள் பல்வேறு வண்ணங்களில் வெளியிடப் படவிருக்கிறது.

---

மதுரை மாநகர கழகத் துணை செயலாளர் சிகுங்கத்துக்கும் செல்வி கலையரசிக்கும் திருமணம் நடைபெற்றது. மணமக்களுடன் முதல்வர் புரட்சித்தலைவர், அமைச்சர்கள் ராகவானந்தம், திருநாவுக்கரசு மற்றும் மதுரை எஸ். பாண்டியன் ஆகியோர் உள்ளனர்.

---

கலைக்குழு முகவரி
டி. எம். ஜானி
கலைக்குழு
7 தர்மராஜா கோயில் தெரு
கொருக்குப்பேட்டை
சென்னை-21.

---

மக்கள் தொகை அடிப்படையில்

## அதிக அளவில் ஆரம்ப சுகாதார நிலையங்கள்: புரட்சிதலைவர் ஆணை

கோபி டிச. 21- மக்கள்தொகை அடிப்படையில் ஊராட்சி ஒன்றியங்களில் ஆரம்ப சுகாதார நிலையங்களை அதிகப்படுத்த புரட்சித்தலைவர் உத்தரவிட்டிருப்பதாக அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

பெரியார் மாவட்டம், கோபிசெட்டி பாளையம் வட்டத்திலுள்ள கூகலூரில் ஆரம்ப சுகாதார நிலையத்திற்கு அடிக்கல் நாட்டியும், கொ[illegible]லூரில் உள்ள கூட்[illegible]வு விவசாய நாணய[illegible]த்தின புதிய கிட்டங்கியை திறந்து வைத்தும்தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:-

கூகலூரில் ரூபாய் 11 இலட்சம் செலவில் கட்டப்படவுள்ள ஆரம்ப சுகாதார நிலையத்திற்கு அடிக்கல் நாட்டும் வாய்ப்பை அளித்து உள்ளீர்கள். தமிழ்நாட்டில் மொத்தம் 367 ஊராட்சி ஒன்றியங்கள் உள்ளன. ஒரு ஒன்றியத்திற்கு ஒரு சுகாதார நிலையம் என்றிருப்பதை மாற்றி ஊராட்சியின் பரப்பளவு, மக்கள் தொகை இவற்றைக் கணக்கில் கொண்டு தேவைப்படும் ஊராட்சி ஒன்றியத்திற்கு மேலும் ஒரு ஆரம்ப சுகாதார நிலையம் நிறுவிட புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

இம்மாவட்டத்தில் ரூ. 50 லட்சம் செலவில் அமைந்துள்ள 100 பவர் லூம்கள் அண்மையில் திறந்து வைக்கப்படவுள்ளது. தொழிலில் பின்தங்கிய தாலுக்காக்கள் இம்மாவட்டத்தில் ஒன்றுகூட இல்லை என்று குறிப்பிட்டார்கள். தமிழக அரசு விரைவில் ஆறு தாலுக்காக்களை தொழிலில் பின்தங்கிய பகுதிகளாக அறிவிக்க பரிசீலனை செய்து வருகிறது. அப்படி அறிவிக்கும்போது இம்மாவட்டத்திலுள்ள ஒருதாலுகாவுக்கு அந்த சலுகை கிடைக்கும். இம்மாவட்டத்தில் 500 ஏக்கர் நிலத்தை கையகப்படுத்தி கொடுத்தால் அதில் சிப்காட் தொழில் இணையம் ஒன்று நிறுவித்தரப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மத்திய அரசு, ரிசர்வ் வங்கி ஆகியவைகள் விவசாயிகள் கடனை ரத்து செய்ய வேண்டாமென்று எதிர்த்தும்கூட தமிழக அரசு அதை ரத்து செய்து இருக்கிறது. தமிழ்நாட்டு மின்சார கட்டணம் மற்ற மாநிலங்களைக் காட்டிலும் மிகக்குறைவு. பெருவிவசாயிகள் பல இலட்சங்களை மின்சார பாக்கியாக வைத்துக் கொண்டுள்ளனர். அவைகளை விரைவில் திருப்பித்தர வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

---

மோட்டார் சைக்கிள்—கார் மோதல்:

## விபத்தில் கழகத் தோழர் காயம்

சென்னை, டிச. 21— கார்—மோட்டார் சைக்கிள் மோதலில் கழகத் தோழர் என். சந்திரசேகர ராஜா காயமடைந்தார்.

ஈக்காடு தாங்கலுக்குச் சென்றுவிட்டு வரும் வழியில் சந்திரசேகர ராஜா வந்த மோட்டார் சைக்கிளும், எதிரே வந்த ஒரு காரும் கே. கே. நகர் அருகே மோதிக் கொண்டன.

இந்த விபத்தில் சந்திரசேகரராஜாவின் கையிலும் காலிலும் பலத்தஅடிபட்டு தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெறுகிறார்.

---

## ஆலந்தூர் கழக தோழர் மறைவு

சென்னை, டிச. 21— ஆலந்தூர் 21வது வட்ட கழகத் தோழர் டெல்மோரியா நேற்று இரவு காலமானார்.

கடந்த சில நாட்களாக அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவருக்கு வயது-28.

டெல்மோரியாவின் மரணச் செய்தி அறிந்ததும் ஆலந்தூர் நகர கழகச்செயலாளர் லெனினும் மற்ற கழகத் தோழர்களும் சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

---

## ஒப்புதல் வாக்குமூலம்

திராவிட இயக்கம் ஆயிரம் காலத்துப்பயிர். தங்களுக்கு ஆபத்து வரும் நேரத்தில் மட்டும் திராவிடப்பாரம்பரியம் பற்றிப் பேசிடுவோர் அசல் சந்தர்ப்பவாதிகள்.

— 'தமிழினத்தலைவர்' கருணாநிதியின் ஒப்புதல் வாக்குமூலம்.

53-வது வட்டத்தில்

## அடியார் பேசுகிறார்

சென்னை 53 வதுவட்டம் தாதாமுத்தியப்பன் தெருவில் வரும் 23ந் தேதி மாலை கழகப் பொதுக் கூட்டம் ஜானி தலைமையில் நடக்கிறது.

'நீரோட்டம்' ஆசிரியர் அடியார், ஏ. வி. கிருஷ்ண மூர்த்தி, மதுசூதனன். மண்ணடி கிருஷ்ணமூர்த்தி ஜியாவுதீன், எல்லப்பன், கஜேந்திரபாபு, பிள்ளைப் பாக்கம் மூர்த்தி. கருணாநிதி,குமார், விஜயன் ஆகியோர் பேசுவர்.

## சுயவேலைப் பயிற்சி: பெண்களுக்கு அதிக வாய்ப்பு

புதுடெல்லி, டிச. 21— கிராமப்புற இளைஞர்களுக்கு சுயவேலை வாய்ப்புக்கான பயிற்சி அளிக்கும் திட்டத்தில் மூன்றில் ஒரு பங்கு பெண்களுக்கு இடம் அளிக்க வேண்டும் என்று மாநில அரசுகளை மத்திய அரசு கேட்டுக் கொண்டுள்ளது.

கிராமப்புறங்களில் வேலைவாய்ப்பைப் பெருக்கும் நோக்கத்தில் இத்திட்டம் நிறைவேற்றப்படுகிறது. கிராமப்புறங்களில் ஆண்களுக்குச் சமமாக பெண்கள் இருக்கிறார்கள். ஆண்களைப் போல் அவர்களும் திறமைசாலிகளே. எனவே அவர்களுக்கு மூன்றில் ஒரு பங்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்று மத்திய அரசின் கிராமப்புற புனர் நிர்மாண இலாகா கேட்டுக் கொண்டுள்ளது.

27 வருட கோரிக்கையை கழக அரசு நிறைவேற்றி

# 17 ஆயிரம் ஊழியர்கள் இதயத்தில் பால் வார்த்த புரட்சித்தலைவர் அரசு

## சாலைத் தொழிலாளர்கள் நன்றி

**சென்னை. டிச. 21—தமிழ்நாடு பெருவழித்துறை - ஊரகச் சாலை தொழிலாளர்கள் 17 ஆயிரம் பேர்களை நிரந்தரம் செய்து முதல்வர் புரட்சித்தலைவர் நிரந்தரமாகி அவர்களது வயிற்றில் பால் வார்த்துள்ளார்.**

27 ஆண்டு கால கோரிக்கை புரட்சித்தலைவர் ஆட்சியில் நிறைவேற்றப்பட்டுள்ளது.

முதல்வர்புரட்சித்தலைவர் உத்ரவால் பயன் பெற்ற 17 ஆயிரம் தொழிலாளர்களும் நன்றி தெரிவித்துள்ளனர்.

தமிழ்நாடு பெருவழித்துறை ஊரகச் சாலைத் தொழிலாளர்கள் தங்களை நிரந்தரம் செய்யவேண்டும் என்று 1954-ம் ஆண்டு முதல் கோரிக்கை எழுப்பி வந்துள்ளனர். ஆனால் 27 ஆண்டுகாலமாக இந்தக் கோரிக்கை நிறைவேற்றி வைக்கப்படாத நிலை இருந்து வந்தது.

### அரசு உத்தரவு

முதல்வர் புரட்சித்தலைவர் இந்த சங்கத்தின் கோரிக்கையைப் பரிசீலித்து உத்திரவு பிறப்பித்துள்ளார்.

பணி நிரந்தரம் பணி காலத்தில் தொழிலாளர் இறந்தால் ரூ. 10 ஆயிரம் தாமதமின்றி கிடைக்க ஏற்பாடு ஆகியவற்றிற்கு அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

### அமைச்சர் குழந்தைவேலு

17 ஆயிரம் தொழிலாளர்களது வயிற்றில் பால் வார்க்கும் வகையில் உத்தரவு பிறப்பித்த முதல் புரட்சித் தலைவருக்கு இந்தச்சங்கத்தின் பொதுச் செயலாளர் பி. ஏ. பால்ராஜ் நன்றி தெரிவித்துள்ளார்.

உள்ளாட்சிதுறைஅமைச்சர் குழந்தை வேலுவுக்கும் துணை நின்ற அதிகாரிகளுக்கும் பால்ராஜ் நன்றி தெரிவித்துள்ளார்.

சென்னை

## ஏகாங்கிபுரத்தில் கழகக் கூட்டம்

சென்னை, டிச. 21— சென்னை ஏகாங்கிபுரம் சந்திரயோகி சமாதி சாலையில்கழகப்பொதுக்கூட்டம் வரும் நாளை மாலை நடைபெற விருக்கிறது. 26-வது வட்ட கழக அவைத் தலைவர் சி.செல்வமூர்த்தி தலைமை வகிக்கிறார்.

அடியார், இ. மதுசூதனன், கோபா, அமிர்தம், ஜெயபால், ஆர். மணிஆகியோர் பேசுகிறார்கள். மணிமாறன் நன்றி கூறுவார்.

சிகிச்சை முடிந்தது:

மேலவைத் தலைவர்

## டாக்டர் ம.பொ.சி. வீடு திரும்பினர்

சென்னை, டிச. 21— வயிற்று வலிக்காக அறுவை சிகிச்சை பெற்ற மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி. சிகிச்சை முடிந்து வீடு திரும்பினர்.

சென்னை அரசு பொது மருத்துவ மனையில் அறுவை சிகிச்சை நடந்து 34 நாட்கள் தங்கி சிகிச்சை பெற்றார்.

தொடர்ந்து வீட்டில் ஓய்வு எடுக்கும்படி டாக்டர்கள் ஆலோசனை கூறியுள்ளனர்.

மாணவர்கள், ஊழியர்கள் சார்பில்

## தங்கமெடல்: நீதிபதி வழங்குகிறார்

சென்னை, டிச. 21— இதயநோய், காசநோய் பிரிவு மாணவர்கள் ஊழியர்கள் சார்பில் பேராசிரியர் "கே. பி. கிருஷ்ணசாமி தங்கமெடல்" அறக்கட்டளை உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த தங்க மெடலை உயர்நீதிமன்ற நீதிபதி வி. ராமசாமி இன்று மாலை வழங்குகிறார்.

சென்னை மருத்துவக் கல்லூரி ஹாலில் இன்று மாலை விழா நடைபெறுகிறது.

சென்னை பல்கலைக் கழக துணைவேந்தர் சாந்தப்பா இந்த மெடலைப் பெற்றுக் கொள்கிறார்.

சுகாதாரத்துறை செயலாளர் லட்சுமிகாந்தன் பாரதி தலைமை வகிப்பார். சுகாதாரத்துறை இயக்குநர் ஞானதேசிகன்,சென்னைப் பல்கலைக்கழக பதிவாளர் குமாரசாமி சென்னை வைத்தியக் கல்லூரி டீன் பேராசிரியர் வி.சிவராஜன் ஆகியோரும் விழாவில் பேசுகிறார்கள்.

# மதுரையில் பல் மருத்துவக் கல்லூரி விரைவில் துவக்கம்

## அமைச்சர் அண்டே தகவல்

**மதுரை, டிச. 21 — மதுரையில் பல்நோய் மருத்துவக்கல்லூரி ஒன்று விரைவில் துவக்கப்படும் என்று மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் அண்டே தெரிவித்திருக்கிறார்.**

மதுரையில் நடைபெற்ற இந்திய பல்நோய்மருத்துவ சங்க மாநாட்டில் தமிழக மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் அண்டேகலந்து கொண்டு பேசினார்.

அவர் கூறியதாவது:— மதுரை மாவட்டத்தில் குறிப்பாக கிராமப்புறங்களில் 6 பல் நோய் மருத்துவ சிகிச்சை முகாம்கள் நடத்தப்பட்டுள்ளன மதுரை கார்ப்பரேஷன் பள்ளிகளைச்சேர்ந்த சுமார் 27 ஆயிரம் மாணவ மாணவிகளுக்கு பல்நோய் மருத்துவ சோதனை செய்யப்பட்டு சிகிச்சையும் அளிக்கப்பட்டுள்ளன. சிகிச்சை முகாம்களிலும் சுமார் 9 ஆயிரம் பேர்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டுள்ளது.

மதுரை நகரில் விரைவில் பல் நோய் மருத்துவக் கல்லூரி ஒன்று துவக்கப்படயிருக்கிறது. அதற்கான நடவடிக்கைகளை தமிழக அரசு எடுத்து வருகிறது.

சிதம்பரத்தில் உள்ள தாலுக்கா தலைமையாக மருநதுவமனையை அங்குள்ள அண்ணாமலை பல்கழகக்கழகம் நடத்தும் பல்நோய் மருத்துவக் கல்லூரியுடன் இணைக்க அரசு முடிவு செய்துள்ளது.

பல்நோய் மருத்துவம் பற்றி கிராமப்புற மக்கள் நன்கு தெரிந்துக் கொள்ள வேண்டும். பல்லை பாதுகாப்பது எப்படி என்பதையும் அந்த ஏழை மக்கள் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே அரசின் நோக்கம். பல்நோய் சிகிச்சை கிராம மக்களுக்கு எளிதில் கிடைக்கக் கூடிய அனைத்து நடவடிக்கைகளையும் அரசு மேற்கொண்டிருக்கிறது.

கிராமப்புற மருத்துவமனைகளில் பல் மருத்துவம் பற்றிய நூதன கருவிகள் மற்றும் சிகிக்சைக்கான வசதிகளை அரசு செய்திருந்தும் அந்த நூதனக் கருவிகள் பயன்படுத்தப்படாமல் இருப்பதை நான் பார்த்த போது அதிக மனவருத்தம் அடைந்தேன். இரண்டு நாட்களுக்கு முன் நான் சீர்காழி மருத்துவமனைக்குச் சென்ற போது பல் மருத்துவத்துக்குப் பயன் படும் நூதன வசது படைத்ததும் பல ஆயிரக் கணக்கான ரூபாய் மதிப்புள்ளதுமான நாற்காலி ஒன்று பயன்படுததபபடா மலை கிடந்ததை நான் பார்த்தேன்.

### அன்பாக பழகுங்கள்

மருத்துவர்கள் பொறுப்பாகவும், மக்களிடத்தில் பண்பாகவும் அன்பாகவும் நடந்துகொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் அண்டே கூறினர்.

தமிழக கவர்னர் சாதிக் அலி மாநாட்டை துவக்கி வைத்தார்.

"மக்கள் நல்வாழ்வுத்துறை செயலாளர் லட்சுமி காந்தன் பாரதி, மருத்துவக் கல்வி இயக்குனர் டாக்டர் ஞானதேசிகன், சென்னை பல் நோய் மருத்துவக் கல்லூரி முதல்வர் டாக்டர் பி, பி. ராஜன் ஆகியோர்களும் விழாவில் பேசினர் கள்.

மாநாட்டின் அமைப்பாளர் சி.பி. பிரசாத் வரவேற்றார். டாக்டர் பி.கே. பாஸ்கர் நன்றி கூறினர்.

## தொலைக்காட்சி செய்திகள் பற்றி அதிகாரி கடிதம்

சென்னை, டிச. 21— வானொலியில் மாநில செய்தி வெளியிடுவதுபோல் தொலைக்காட்சியிலும் செய்தி வெளியிடவேண்டும் தொலைக்காட்சியில் தமிழக செய்திகளுக்கு முக்கியத்துவம் தரப்படுவதில்லை இந்நிலை மாற வேண்டும்என்றும் பிரதமர் இந்திரா, மத்திய அமைச்சர் வசந்தசாத்தே ஆகியோருக்கும் சத்யாலயாசபா செயலாளர் பி. ராமகிருஷ்ணன் மனு அனுப்பி இருந்தார்,

இதற்கு தொலைக்காட்சி நிகழ்ச்சி கட்டுப்பாடு அதிகாரி ஹரிஷ் அவஸ்தி பதில் அனுப்பியுள்ளார்.

அதில் "வானொலியைப் போல தொலைக்காட்சிக்கு இன்னும் செய்திக்கோவை அமைப்பு உருவாகவில்லை. அப்படி உருவானதும், நிறைவான முறையில் செய்திகள் வெளியிடப்படும் என்று அதிகாரி பதில் அனுபபியுள்ளார்.

முன்றுவது முயற்சி: அமெரிக்க ஜனாதிபதி

# ரீகனைக் கொல்ல தபாலில் வந்த வெடிகுண்டு

## சோதனையில் கைப்பற்றப்பட்டது

**வாஷிங்டன். டிச. 21— அமெரிக்க ஜனாதிபதி ரீகனைக் கொல்ல ஒருவர் தபாலில் வெடிகுண்டை அனுப்பினர். ஆனால் அதைப் போலீசார் கைப்பற்றி விட்டனர்.**

ஜனாதிபதிரீகன் வசிக்கும் வெள்ளை மாளிகையில் சுவர் ஏறிக்குதித்து வந்த வாலிபன் ஒருவனையும் கைது செய்துள்ளனர்.

அமெரிக்க ஜனாதிபதி ரீகனைக் கொல்ல ஏற்கனவே இருமுறை முயற்சிகள் நடந்துள்ளன.

அதில் ஒரு முறை அவர் மீது குண்டு பாய்ந்தது படுகாயம் அடைந்தார், அதில் ரீகன் குணமடைந்து விட்டார்.

இப்போது மீண்டும் ஒரு சதி நடந்துள்ளது,

ரீகனின் உயிரைக்குடிக்க தபாலில் ஒரு வெடிகுண்டு வந்தது.

தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த போர்டோரிகா நாட்டில் உள்ள சன்ஜூலான் நகரத்தில் இருந்து ஜனாதிபதி ரீகனுக்கு ஒரு தபால் வந்தது. அது கனமாக இருந்தது.

வழக்கமாக ஜனாதிபதி ரீகனுக்கு வரும் கடிதங்கள் எல்லாம் வெள்ளை மாளிகையில் எக்ஸ்ரே கருவிகள் மூலம் பரிசோதனை செய்யப்படுவது வழக்கம்.

பரிசோதனை நடந்த பிறகுதான் அவைகள் ரீகனுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அந்த வகையில் போர்ட்டோரிகா தபால் சோதனை செய்யப்பட்டது.

அதில் வெடி குண்டு இருந்ததை போலீசார் கண்டுபிடிதது விட்டனர்.

### ரீகன் உயிர் தப்பினர்

அந்த வெடிகுண்டை கைப்பற்றி அழித்து விட்டனர். இதனல் வெடிகுண்டு பேராபாயத்தில் இருந்து ஜனாதிபதி ரீகன் உயிர் தப்பியுள்ளார்.

இந்த சம்பவம் நிகழ்ந்ததோடு இல்லாமல் வெள்ளை மாளிகையில் மற்றுமோர் சம்பவமும் நடந்துள்ளது.

வெள்ளை மாளிகை சுவரை தாண்டி ஒரு வாலிபர் உள்ளே வந்தார். 23 வயதான அந்த வாலிபர் கைது செய்யப்பட்டுள்ளார்.

அந்த வாலிபனும் ஜனாதிபதி ரீகனைக்கொல்ல தான வந்தாரா என்பது பற்றி போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## தமிழகத்தில் மேலும் 7 புதிய தாலுக்காகள்

மதுரை, டிச. 21— தமிழகத்தில் வரும் ஜனவரி மாதம் முதல் மேலும் 7 புதிய தாலுக்காக்கள் அமைக்கப்படும் என வருவாய்த் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.

தற்போது துணை தாலுக்காக்களாகவுள்ள, பானூர், பாளையம் கோட்டை, சிவகிரி, வால்பாறை, நீடாமங்கலம், பொறையார், ராமேஸ்வரம், ஆகியவைகளை புதிய தாலுக்காக்களாக அமைக்கப்படுகிறது.

## சென்னையில் ஜேப்பியார் நிகழ்ச்சிகள்

டிசம்பர், 26- 106-வது வட்டம்

28- 95-வது வட்டம்

29- 42-வது வட்டம்

30- 3 வது வட்டம்.

சிவகாசி வெடி விபத்து:

# உயிரிழந்தோர் குடும்பங்களுக்குஅரசு ரூ. 91 ஆயிரம் உதவி

## அமைச்சர் எஸ்.டி.எஸ். வழங்கினர்

**மதுரை. டிச. 21— சிவகாசி அருகேநடந்த வெடிவிபத்தில் இறந்தோர் குடும்பத்திற்கு முதலமைச்சர் நிவாரணநிதியிலிருந்து 91 ஆயிரம் ரூபாய் வழங்கப்பட்டது.**

சிவகாசி அருகே நடந்த செப்டம்பர் 19-ந்தேதியன்று வெடி தயாரிக்கும தொழிற்சாலை ஒன்றில் வெடிவிபத்து ஏற்பட்டதும், அதில் 32 பேர் இறந்ததும் தெரிந்ததே.

இறந்து போன 32 பேரின்குடும்பத்தினருக்கும மொத்தம் 91 ஆயிரம் ரூபாய் உதவி நிதியாக முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து வழங்கப்பட்டது.

இந்தத் தொகையை வருவாய் துறை அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சி ஒன்றில் வழங்கினர்.

5,30 லட்ச ரூபாய் செலவில் கட்டப்பட்ட விருதுநகர் தாலுகா அலுவலகத்தையும அமைச்சர் எஸ். டி. எஸ். திறந்து வைத்தார்.

இந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசுகையில் விருதுநகர், அருப்புக்கோட்டை ஆகிய இரண்டு இடங்களிலும் 8 லட்ச ரூபாய் செலவில் ஓய்வு விடுதிகள் கட்டப்படும் என அமைச்சர் ராஜேந்திரன் கூறினர்.

இந்நிகழ்ச்சிக்கு அமைச்சர் காளிமுத்து தலைமை தாங்கினர்.

மேற்கு வங்க முதல்வர் அறிவிப்பு:

# கல்கத்தாவில் பாரதிக்கு சிலை வைக்கப்படும்

**கல்கத்தா, டிச. 21— தேசிய மகாகவி பாரதிக்கு மேற்கு வங்கத் தலைநகர் கல்கத்தாவில் சிலை வைக்கப்படும் என்று மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு உறுதி அளித்துள்ளார்.**

மேற்கு வங்க அமைச்சரும் விழாக்குழு தலைவருமான பிரசந்தசூர் இந்தத் தகவலை தெரிவித்தார்.

கல்கத்தாவில் பாரதி தமிழ்ச்சங்கத்தின் சார்பில் தேசிய மகாகவி பாரதியாரின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது.

மேற்கு வங்க ஆளுநர் பி. டி. பாண்டே பாரதி நூற்றாண்டு விழாவினை தொடங்கி வைத்தார்.

விழாக்குழுத் தலைவரும், நகர அபிவிருத்தி அமைச்சருமான பிரசந்தசூர் வரவேற்புரை நிகழ்த்தினர், அப்போது அவர் கூறியதாவது;—

கல்கத்தாவில் மகாகவி பாரதியாருக்கு சிலை நிறுவுவதற்கு முதல்வர் ஜோதிபாசு உறுதி அளித்துள்ளார்.

### கல்கத்தாவில் பாரதி சிலை

மேற்கு கல்கத்தாவில் தென்னாட்டினர் அதிகமாக குடிவாழும் லேக்ரோடின் பெயர் "கவி பாரதி சாலை என்று பெயரிடப்பட்டுள்ளது. இவ்வாறு அமைச்சர் பிரசந்தசூர் தெரிவித்தார்.

ஆளுநர் பாண்டே பேசுகையில பாரதியார் ஒரு தேசிய கவியாக விளங்கினர்.

அவர் வாழ்ந்த குறுகிய காலததிலேயே ஆங்கிலேய ஆட்சியாளர்களை அலற வைத்தார் என்றுகூறினர்.

### பாரதி உருவப்படம்

தகவல் கலாசார இயக்குநர் எஸ். கே. செங்குப்தா ஜாதவ்பூர் பல்கலைக்கழக துணைவேந்தர் சவுத்ரியிடம் பாரதி உருவப் படத்தை வழங்கினர்.

கல்கத்தா பல்கலைக் கழகம், காசி இந்து பல்கலைக்கழகம், அலகபாத் பல்கலைக்கழகம் ஆகியவற்றிற்கும் பாரதி தமிழ் சங்கம் பாரதியார் உருவப் படங்களைக் கொடுத்துள்ளது.

லோகமானிய பாலகங்காதர திலகரின் பேரன் பாரதி தமிழ் சங்கத்திற்கு திலகரது உருவப்படத்தை வழங்கினர்

பாரதி சங்கத்தலைவர் எம். சீனிவாசன் விழாவுக்கு தலைமை தாங்கினர்,

## கிரிக்கெட்: இந்தியா வெற்றி

ஜலந்தர், டிச. 21— இந்தியாவிற்கும்-இங்கிலாந்திற்கும் இடையே இங்கு நடந்த ஒருநாள் கிரிக்கெட் போட்டியில் இந்தியா வெற்றிப் பெற்றது.

இங்கிலாந்து அணி, 36 ஓவர்களில் 7 விக்கெட்கள் இழப்பிற்கு 161 ரன்கள் எடுத்தது.

இந்திய அணி 35.3 ஓவர்களில் 4 விக்கெட்களை இழந்து 164 ரன்கள் எடுத்து வெற்றி பெற்றது.

இந்திய அணியைச் சேர்ந்த வெங்சர்க்கார் 88 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். யஷ்பால்சர்மா 28 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தார்.

அறுவை சிகிச்சையில் அபார சாதனை

# கைகளை இழந்த இளம் பெண்ணுக்கு கால் விரல்கள் கை விரல்களாக மாறின

ஹாங்காங், டிச. 21— விபத்து ஒன்றில் 19 வயது இளம் பெண் ஒருத்தி இரண்டு கைகளையும இழநதாள்.

ஆனல் அந்த இளம் பெண்ணின் கால் விரல்களை கையில் இணைத்து அறுவை சிகிச்சை மூலம் செயல்பட வைத்து அபார சாதனையை டாக்டர்கள் செய்து காட்டியுள்ளனர்.

இந்த சாதனை சீனவில் நடந்துள்ளதாக செய்தி வந்துள்ளது.

சீனவில் 19 வயதான இளம் பெண் ஒருத்தி விபத்து ஒன்றில இரண்டு கைகளையும் இழந்து விட்டாள்.

உண்ண, உடுக்க எதற்கும் உதவ வேண்டிய கைகள் இல்லை. கஷ்டப்பட்டாள் கவலை கொண்டாள். அவள் கவலையைப் போக்க டாக்டர்கள் முன் வந்தனர்.

அவளுக்கு அறுவை சிகிச்சை செய்தனர். அந்த இளம் பெண்ணின் காலின் பெருவிரல் தோலின் மடிப்பையும் காலின் இரண்டாவது விரலையும் டாக்டர்கள அகற்றினர்கள்.

பிறகு பெருவிரல் தோலின் மடிப்புக்குள் உலோகத் துண்டு ஒன்றை வைத்தனர்.

இவ்வாறு உருவாக்கிய வற்றைக் கொண்டு இரண்டு விரல்கள் புதிதாக அமைக்கப்பட்டன.

இந்தப் புதிய விரல்கள் அந்த பெண்ணின் முன் கையுடன் இணைக்கப்பட்டன.

நரம்புகள், தசைகள், ரத்தக் குழாய்கள், தசை நாளங்கள் எல்லாவற்றையும் அந்தவிரல்களுடன் இணைத்தனர்,

அறுவை சிகிச்சை முடிந்தது. இப்போது அந்தப புதியவிரல்களால் மடக்க முடிகிறது, அல்லது விரிக்க முடிகிறது.

இவ்வாறு இருமுறை அறுவை சிகிச்சை மூலம் வலக்கை, இடக்கை இரண்டுக்கும் புதிய விரல்கள் இணைக்கப்பட்டு விட்டன.

இப்போது அவள் அந்த விரல்களால் பேனபிடித்து எழுதுகிருள். சிறிய சிறிய சாமான்களையும் எடுத்துப் பிடிக்கிருள்.

குளிர், வெப்பம், அரிப்பு போன்ற உணர்வுகளும் அந்த விரல்களில் ஏற்படுகின்றன செயல்படவும் செய்கிறது.

அறுவை சிகிச்சை வரலாறறில் இப்படி ஒரு சாதனை நடந்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

# அண்ணா






போலந்தில் ராணுவ ஆட்சி:

## அமெரிக்காவில் போலந்து நாட்டு தூதர் அடைக்கலம்

### அமெரிக்க அமைச்சர் சந்திப்பு

வாஷிங்டன், டிச. 21— அமெரிக்காவில் உள்ள போலந்து நாட்டு தூதரின் வேண்டுகோள்படி அவருக்கு அமெரிக்க அரசு அடைக்கலம் கொடுத்துள்ளது. அமெரிக்க வெளிவிவகார அமைச்சர் அலெக்சாண்டர் ஹெய்க் இதை அறிவித்தார்.

போலந்து நாட்டில் ராணுவ ஆட்சி அமுல் செய்யப்பட்டதைத் தொடர்ந்து "சாலிடாரிடி" என்றழைக்கப்படும் சுதந்தர தொழிற்சங்க தொழிலாளர்கள் ஆட்சியை எதிர்த்து கிளர்ச்சி செய்து வருகிறார்கள்.

தொழிலாளர்களின் எதிர்ப்பை ஒடுக்குவதற்காக ராணுவ ஆட்சி கடுமையாக நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

## 75 ஆயிரம் பேர் கைது

சுமார் 75 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் அங்கே கைதுசெய்யப்பட்டுள்ளனர் என்றும் செய்திகள் கூறுகின்றன,

சுதந்திர தொழிற்சங்க தலைவர் வாலேசா கைது செய்யப்பட்டு சித்ரவதை செய்யப்படுகிறார் என்றும் ஒரு செய்தி கூறுகிறது.

போலந்து நாட்டில் உள்ள வெளிநாட்டைச் சேர்ந்தவர்களும் தங்களது சொந்த வீடுகளுக்கு திரும்பிக் கொண்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவில் உள்ள போலந்து தூதர் ரமால்டு ஸ்பாசவுக்கி தனக்கு பாதுகாப்புத் தரவேண்டும் என்று அமெரிக்க அரசிடம் தஞ்சம் அடைந்தார். தனக்கு அமெரிக்காவில் அடைக்கலம் தர வேண்டும் என்று அவர் வேண்டுகோள் விடுத்தார். அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட அமெரிக்க அரசாங்கம் ரமால்டுஸ்பாசவுக்கிக்கு அடைக்கலம் கொடுத்தது.

நேற்று டெலிவிஷன் பேட்டி ஒன்றில் இதுபற்றி குறிப்பிட்ட அமெரிக்க வெளி விவகார அமைச்சர் அலெக்சாண்டர்ஹெய்க் கூறியதாவது:

போலந்து நாட்டின் ராணுவ ஆட்சியின் அட்டூழியங்களையும், கெடுபிடிகளையும் தூதர் ரமால்டு ஸ்பாசவுக்கி பகிரங்கமாகவே கண்டித்து வந்தார்.

## ரீகன் உத்தரவு

ஸ்பாசவுக்கி கடந்த 4 ஆண்டுகளாக அமெரிக்காவில் தூதராகபதவி வகித்து வருகிறார். போலந்து நாட்டு அரசியல் தலைவர்களில் அவர் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவர். போலந்து அரசு ராணுவ ஆட்சியை அமுல்படுத்தி கெடுபிடி செய்வதை அவர் கண்டித்தார்.

அவருக்கு போலந்து அரசால் ஆபத்து ஏற்படாமல் பார்த்துக் கொள்வது எங்கள் கடமை. தனிப்பட்ட வகையில் அவருக்கும் அவரது குடும்பத்துக்கும் பாதுகாப்பு கொடுப்போம.

வெளிவிவகார அமைச்சகத்துக்கு அவர்பலமுறை வந்து அடைக்கலம் கோரினார். அவருக்குஅடைக்கலம் கொடுத்து ஆதரிக்க வேண்டும் என்றும் ஜனதிபதி ரீகன் உத்தரவு பிறப்பித்துள்ளது.

இவ்வாறு அமெரிக்க அமைச்சர் அலெக்சாண்டர் ஹெய்க் கூறினார்,



## போலந்தில் உள்நாட்டு கலவரமா?

லண்டன், டிச. 21— போலந்தின் தென்பகுதியில் தொழிலாளர் வேலை நிறுத்தம் நடக்கிறது. அவர்களை ஒடுக்க புதிய ராணுவ ஆட்சி அங்கே ராணுவத்தை அனுப்பியது. ஆனால் ராணுவத்தினர் தொழிலாளர்களுக்கு எதிராக செயல்பட மறுத்து விட்டனர். இத்தகவல்களை இங்கிலாந்து ஒலிபரப்பு நிறுவன நிருபர் ஒருவர், போலந்திலிருந்து வந்ததும் தெரிவித்தார். ராணுவத்துக்கும் போலீசுக்கும் மோதல் ஏற்பட்டு உள்நாட்டுக்கலவரம் சில இடங்களில் நடப்பதாகவும் அந்த நிருபர் கூறினார்.

போலந்தில் கலவரம்:

## இந்தியர் 26 பேர் தாயகம் திரும்புகிறார்கள்

நயனேஸ்ஹாம், டிச.21 போலந்துநாட்டில்ராணுவ ஆட்சி அமுல் செய்யப்பட்டதைத் தொடர்ந்து உள்நாட்டில் கலவரம் மூண்டுள்ளது தெரிந்ததே.

இந்தியர்கள் 26 பேர்களை போலந்து நாடு கடத்தியுள்ளது. இவர்கள் முதலில் பின்லாந்துக்கு அனுப்பப்பட்டனர்.

பின்லாந்து அவர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க மறுத்துவிட்டது. பின்னர் அவர்கள் ஸ்வீடனுக்கு அனுப்பப்பட்டனர். ஸ்வீடன் நாட்டிலிருந்து 26 இந்தியர்களும் விரைவில் இந்தியாவுக்கு திரும்ப அனுப்பப்படுவார்கள் என்று தெரிகிறது.

என்.எஸ்.கே. நகரில்

## மருத்துவ கல்வி திட்ட துவக்கவிழா

சென்னை. டிச. 21— சென்னை 75வது வட்டம் என்.எஸ்.கே நகரில்அரிமா சங்கங்களின் சார்பில், மருத்துவ பயிற்சி முகாமும் மருத்துவகல்வித்திட்ட துவக்க விழாவும் வரும் 22·12·81 அன்று நடைபெறவிருக்கிறது. மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் அண்டே விழாவைத் துவக்கி வைத்துச்சிறப்புரை ஆற்றுகிறார். உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு சிறப்பு விருந்தினராக கலந்து கொள்கிறார். மற்றும் மாநகராட்சி தனி அதிகாரி முருகராசு ம லவை உறுப்பினர் ஜேப்பியார் மாநகராட்சி ஆணையர் யாஸ்மின் அகமது, வ. கோதண்டராமன், பி.கே. அர்ச்சுனன்,வகாப், ஆர். துரை, கலியபெருமாள், கந்தையா, மாரிமுத்து ஆகியோர் விழாவில் கலந்து கொள்கிறார்கள்.

அமைச்சர் அரங்கநாயம் தகவல்

## 5 ஆயிரம் ஆரம்ப பள்ளிகளில் நர்சரி வகுப்புகள் துவக்கம்

தஞ்சை, டிச. 21—தமிழ்நாட்டில் 5 ஆயிரம் ஆரம்பப் பள்ளிகளில் நர்சரி வகுப்புகள் துவக்கப்படும் என கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கூறினர்.

நிருபர்களிடம் பேசுகையில் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது:—

ஆரம்பக் கல்வித் துறையில் புதிய முறையை கொண்டுவருவது குறித்து அரசு ஆலோசித்து வருகிறது.

ஒரே மாதிரியாக கேள்விக்குப் பதில் சொல்லும் வகையில் தற்போதைய கல்வி முறை உள்ளது.

புதிய முறையில் ஆரம்பக் கல்வியை பயிற்றுவிக்க அரசு ஆசிரியர்கட்கு பயிற்சி அளிக்கும்.

தமிழ்நாட்டில் 5 ஆயிரம் ஆரம்பப்பள்ளிக் கூடங்களில் நர்சரி வகுப்புகள் தொடங்கப்படும்.

இந்த வகுப்புகளுக்கான பாடத் திட்டத்தை அதற்காக நியமிக்கப்பட்டுள்ள கமிட்டி விரைவில் சமர்ப்பிக்கும்.



### அனைத்து கட்சிக் கூட்டம்

கல்லூரி மாணவர் பேரவைத் தேர்தல் குறித்து ஆராய டிசம்பர் 31ந் தேதி சென்னையில் அனைத்துக் கட்சிக்கூட்டம் நடக்கும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினர்.

## பீகாரில் கடுங்குளிர்: 70 பேர் சாவு

பாட்னா. டிச. 21— கடந்த 3நாட்களில் பீகார் மாகாணம் நவா தா, அசாரிபாக், சமஷ்டிபூர் முதலிய பகுதிகளில் ஏற்பட்டிருக்கும்கடுங்குளிரால் 70 பேர் உயிரிழந்தனர். மொக்கமா- பாவுனி பகுதியில் மட்டும் கடுங்குளிருக்கு 21 பேர் பலியாகினர்.

உ. பி.யில் 11 மாதத்தில்

## 1,200 கொள்ளையர் சுடப்பட்டு சாவு: 8 ஆயிரம் பேர் கைது

லக்னோ, டிச. 21— உத்திரபிரதேச மாநிலத்தில் கடந்த 11 மாத காலத்தில் 1200 கொள்ளையர்கள் போலீசாருடன் நடந்த மோதல்களில் சுடப்பட்டு இறந்தனர். 8 ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டனர்.

இது குறித்து உத்திரபிரதேச மாநில அரசு அதிகாரி ஒருவர் கூறியிருப்பதாவது:

உத்திரபிரதேச மாநிலத்தில் கடந்த 11 மாத காலத்தில் போலீசாருக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் இடையே 6 ஆயிரம் மோதல்கள் நடந்துள்ளன.

### ரகசிய ஆயுத ஆலை

இந்த மோதல்களில் 1200 கொள்ளையர்கள் துப்பாக்கிச் சூட்டில் இறந்தனர். 8 ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டனர்.

200 ரகசிய ஆயுத தொழிற்சாலைகள் கண்டுபிடிக்கப்பட்டு 11 ஆயிரம் ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

இந்த மோதல்களில் 100 போலீசார் கொல்லப்பட்டனர். 460 போலீசார் காயமடைந்தனர்.

24 அரிஜனங்கள் கொல்லப்பட்ட தியோலிசம்பவம் தொடர்பாக 4 பேர் கைது செய்யப்பட்டனர் 4 பேர் ஒரு மோதலில் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

தி.மு.க. ஏட்டின்

## பொய்ச் செய்திக்கு மறுப்பு

சென்னை, டிச. 21— சென்னை பெரம்பூர் பகுதி துணைச் செயலாளர் சீனிவாசன். 42·வது வட்டச் செயலாளர் கோ. முனுசாமி, அரங்கநாதன் மன்றச் செயலாளர் ஜீவா ஆகியோர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

42·வது வட்ட தி. மு. க. ஆசாமி மதியழகன் செய்ததாகக் கூறப்படும் தகராறில் கழகத்துக்கு சம்பந்தமில்லாத பிரகலாதன் என்பவரை இணைத்தும் அந்தத் தகராறு தொடர்பாக 42·வது வட்ட கழக அவைத் தலைவர் காட்டையா பி. 2. காவல்நிலையத்தில் புகார் தந்ததாகவும், தி.மு.க. ஏடான எதிரொலி செய்தி வெளியிட்டுள்ளது. எந்தக்காவல் நிலையத்திலும்காட்டையா எந்தப் புகாரையும் தரவில்லை.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.






Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printedby him at All India Anna D. M. K. Perarignar Anna Trsut Press at 34, Nelson Manickam Road, Madras-600 029
Editor: E. PARASURAMAN.